# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 4 | இதழ்: 2 | ஏப்ரல் 2017 | வருடச் சந்தா ரூ. 100/- Volume : 4 | Issue: 2 | April 2017 | Annual Subscription Rs. 100/-



மனம் கடந்த நிலை

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே







மனங்கடந்த நிலைக்குப் போவது என்பது கூட அனுபவத்தைத் தேடும் போக்குதான். அது மனோ லயத்துக்குக் கொடுக்கும் முக்கியத்துவமேயாகும். மனங்கடந்த நிலை என்ற பெயரில் மீண்டும் மனோலயத்துக்கு முக்கியத்துவம் கொடுக்காமலிருப்பது கூட மனோலய நாசத்துக்கு உதவியாக இருக்கிறது. மனோலய நாசந்தான் நடைமுறை உண்மையான மனங்கடந்த நிலை ஆகும். இதுவே முக்தியின் செயல்பாடாகும்.

- ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?


Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655



# மனம் கடந்த நிலை

– ஸ்ரீ பகவத்

மனித மனம் அற்பமான ஒன்று.

– மிகவும் சாதாரணமான ஒன்று.

மனதைக் கடந்து செல்ல வேண்டும்.

அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்?

மனங்கடந்த ஒன்றின் மீது நமது கவனத்தைக் குவிக்க வேண்டும். அப்படி மனதையும், கவனத்தையும் மனங்கடந்த ஒன்றின் மீது குவிக்கும் போது நாமே இல்லாமல் கரைந்து போய் விடுகிறோம்.

மனங்கடந்த ஒன்றின் மீது நமது கவனத்தையும் மனதையும் குவிப்பது எவ்வாறு?

இரண்டு சிந்தனைகளுக்கு இடையே ஓர் இடைவெளி இருக்கிறது. குறிப்பிட்டு எதையுமே கவனிக்காமல் நம்முடைய உள்ளார்ந்த இருப்பு நிலையை நாம் கவனிப்போமானால் ஒன்று மற்ற ஒருவித சூன்ய நிலை நமக்குப் புலப்படும்.

அந்த சூன்ய நிலையையே நாம் கவனித்து வருவோமாயின் அந்த சூன்யத்தோடு நாம் ஐக்கியமாகி விடுவோம்.

டார்ச் லைட்டின் ஒளியை இரவு நேரத்தில் ஒரு பொருளின் மீது பாய்ச்சுகிறோம் என வைத்துக் கொள்வோம்.

நமது டார்ச் லைட்டின் ஒளியானது அந்தப் பொருளாக மாறி அந்தப் பொருளை நமக்குக் காட்டும்.

இப்போது நாம் நமது டார்ச் லைட்டின் ஒளியை எந்தப் பொருளின் மீதும் திருப்பாமல்

ஆகாயத்தின் மீது – வெட்ட வெளியின் மீது மட்டும் திருப்புகிறோம் என வைத்துக் கொள்வோம்.

இப்போது நம்முடைய டார்ச் ஒளி என்ன ஆகும்?

அது எதனைக் காட்டும்?

அது எதனையும் காட்டாது. அது எதிர் கொள்ளும் வெட்ட வெளியுடன் தானும் ஐக்கியமாகிப் போய்விடும். எதுவுமே புலப்படாமல் போய்விடும்.

ஒளி செல்லும் பாதையில் தூசுகள் எவையாவது இருந்தால் மட்டுமே ஒளி இருப்பது கூடத் தெரியும். இல்லாவிடில் அது கூட இல்லாமல் மறைந்து விடும்.

இப்படி நாம் நமது கவனத்தை ஒன்று மற்ற தன்மையை நோக்கிச் செலுத்தும் போது

நமது கவனமும் ஒன்று மற்றதாகிப் போய் விடுகிறது.

எதுவாகவோ இருந்த நம் மனது எதுவுமற்றதாகப் போய்விடுகிறது.

மனதோடு இருந்து மனதாகச் செயல்பட்ட நமது கவனம் – நமது உணர்வு நிலை – விழிப்பு நிலை

இப்போது மனதிலிருந்து விடுபட்டு மனமற்ற ஒன்றாகி விடுகின்றது.

மனம் கடந்த ஒன்றாகி விடுகின்றது. உணர்வு நிலை மாத்திரமாகி விடுகின்றது.

மனமற்ற சித் சொரூபமாகி விடுகிறோம்.

மனம் என்னும் மாயையிலிருந்து விடுபட்டு விடுகிறோம்.

இந்த சுத்த நிலையை, மெய்யுணர்வு நிலையென்று கூறலாம். சுத்த நிலையென்று கூறலாம். மனமற்ற நிலையென்று கூறலாம். சூன்ய நிலை என்று கூறலாம். சுய ஒளி நிலையென்று கூறலாம்.

நம் மனதுக்கு ஆதாரமாக இருக்கும் இந்த அறிநிலைதான் – சித் அம்சந்தான் மனங்கடந்த மெய் நிலையாக உள்ளது.

இது தான் இருளிலிருந்து விடுபட்ட ஒளிநிலை. மருளிலிருந்து விடுபட்ட அருள் நிலை. மனச்சிதறல்களிலிருந்து விடுபட்ட பூரண நிலை.

இவையெல்லாம் உண்மை தானா?

நிச்சயமாக உண்மை தான்; பொய்யில்லை.

ஆனால் இவை அனைத்தும் யோக சாதனையின் மூலமாக ஏற்படும் மனோ லயத்தின் அம்சமே.

இது மனங்கடந்து போவதன்று. மனமே செயலற்று அடங்கியிருக்கும் நிலைதான் இது.

இங்கு மனதின் செயல்களெல்லாம் ஸ்தம்பித்துப் போய் விடுவதால், பெயரளவில் இதை மனங்கடந்த நிலையென்று கூறி விடுகிறோம்.

உண்மையில் இதுவும் மனதின் ஒருவித நிலையே.

நம்முடைய மொத்த இருப்பு நிலையே மனதால் ஆக்கப்பட்டது தான். மனதே எப்படி மனதைக் கடந்து போக முடியும்?

உடலை விட்டு "நாம்" வெளியேறி விடலாம். நாம் என்று நம்மை நாமே கூறிக் கொள்வது அந்த உடலினுள்ளே தங்கியிருந்து செயல்படும் சூட்சும சரீரமான மனோ சரீரமே.

இந்த சூட்சும சரீரம் என்பது நம் மனதால் ஆக்கப்பட்ட ஒன்றே.

எல்லா சரீரங்களுக்கும் ஆதாரமாக இருப்பது தான் ஆன்மா. ஆன்மா என்பது பல அல்ல. அது ஒன்றே ஒன்று தான். அதைத் தான் சித் அம்சம் என்று கூறுகிறோம்.

அதுதான் மனதினுள்ளும், உடலினுள்ளும் இருந்து செயல்படுகிறது. உடலினுள்ளே இருந்து செயல்படுவதால் அதனை ஆன்மா என்று கூறுகிறோம். அனைத்தினுள்ளும் இருந்து செயல்படும் அதனையே பிரம்மம் என்ற பெயரில் அழைக்கிறோம்.

தன்னுணர்வோடு இருப்பதை – சித், பிரக்ஞை, Awareness, ஆன்மா, பிரம்மம் என்று அழைக்கின்றோம்.

ஆன்மாவின் ஒளியைக் கொண்டு – பிரக்ஞையைக் கொண்டு நமது மனமும், உடலும் தன்னுணர்வோடு செயல்படுகிறது.

நமது சூட்சும சரீரமான மனோசரீரத்தின் சேர்க்கையால் மட்டுமே நமது ஸ்தூல சரீரமான உடலும் தன்னுணர்வோடு செயல்படுகிறது.

உடலை விட்டு சூட்சும சரீரம் சிலருக்கு வெளியே வந்திடும் போது, சூட்சும சரீரம் மட்டுமே தன்னுணர்வோடு இருக்கும். ஸ்தூல சரீரமான உடல் தன்னுணர்வு இல்லாமல் போய் விடும்.

ஆன்மா – பிரம்மம் என்பது தன்னுணர்வோடு இருந்தாலும், தன்னளவில் உணர்ந்தறியும் அம்சம் எதுவும் இல்லாத காரணத்தினால் அது உணர்வற்று இருப்பது போன்றே ஆகிவிடும்.

எதையாவது நாம் அறிகிறோம் என்றால் அது நம்முடைய மனோ அம்சத்தை மட்டுமே. மனதைத் தவிர வேறு எதனையுமே நம்மால் அறிய முடியாது.

நாம் ஒரு ஓசையைக் கேட்டாலும் சரி அல்லது ஒளியைப் பார்த்தாலும் சரி,

நம் மனோசரீரமான சூட்சும சரீரத்தின் மூலமே அதனைக் கிரகித்து அறிகிறோம்.

மனோ சரீரத்தின் மூலமே அந்த உணர்வுகள் யாவும் இருப்புத் தன்மையை அடைகின்றன.

உண்மையான இருப்புத்தன்மை ஆன்மாவுடையதாக இருந்தாலுங் கூட

நடைமுறை இருப்புத்தன்மை, மனதினுடையதாக மட்டுமே உள்ளது. – சூட்சும சரீரத்தினுடையதாக மட்டுமே உள்ளது.

"நான் இருக்கிறேன்" என்று கூறுவது நம் மனம் மட்டுமே.

அதற்கு மட்டுமே, தன்னைத் தனிமைப்படுத்தி விளக்கும் தன்மை உள்ளது.

ஆன்மாவுக்கு தன்னைத் தனிமைப்படுத்தி விளக்கும் தன்மை கிடையாது.

மனோ சரீரம் தனிமையானது. ஒவ்வொரு சரீரமும் ஒரு ஜீவன் எனக் கருதப்படுகிறது.

நமது மனோசரீரமான சூட்சும சரீரமானது,

தனது நுகர்ச்சிக்கு உட்பட்டதை மட்டும் அறிய முடியுமே தவிர, நுகர்ச்சிக்கு உட்படாத எதனையும் அறிய முடியாது.

அப்படி நாம் எதையாவது அறியும் போது அறியப்படும் பொருளை,

பொருள்படுத்தியும் அறியலாம்; பொருள்படுத்தாமலும் அறியலாம்.

தெருவில் நாம் நடந்து செல்லும் போது எத்தனையோ விதமான ஓசைகள் கேட்கின்றன.

அவற்றுள் எதையாவது தனிமைப்படுத்திக் கேட்டோமானால் அது என்ன ஓசை, அந்த ஓசையின் மூலம் கிடைக்கும் செய்தி என்ன என்பவையெல்லாம் தெரியும்.

அப்படி எதனையும் தனிமைப்படுத்தாமல் மொத்தமாகவும் ஓசைகளைக் கேட்க முடியும். அப்படிக் கேட்கும் போது எதனையும் பிரித்து விளங்கிக் கொள்ள முடியாது.

இப்படித் தனிமைப்படுத்திக் கவனிப்பதும், மொத்தமாகக் கவனிப்பதும் நமது செவிப்புலன் மட்டுமே.

இப்படி நம் மனதானது எதையாவது குறிப்பிட்டும் கவனிக்கலாம்; எதையும் குறிப்பிடாமல் மொத்தமாகவும் கவனிக்கலாம்.

அது எப்படிக் கவனித்தாலும் மனதின் கவன உணர்வு மட்டுமே செயல்படுகிறது.

குறிப்பிட்ட ஒரு ஓசையை மட்டும் கவனிப்பதுதான் ஓசையைக் கவனிப்பதாகும்; மொத்தமாகக் கவனித்தால் அது ஓசையைக் கவனிப்பது ஆகாது

– என்று அர்த்தமல்ல.

இப்படி மனதால் நாம் என்ன செய்தாலும் அது மனதின் செயல் மட்டுமே.

மனதைக் கடந்து செல்வதாக எண்ணுவது, சூன்யத்தில் இருப்பதாக எண்ணுவது

– அனைத்தும் மனதின் அம்சம் மட்டுமே.

மனதானது உடலைக் கடந்து செல்லலாம். அல்லது வேறு எதையாவது கடந்து செல்லலாம். மனதே மனதைக் கடந்து செல்ல முடியும் என்பது பொருளற்றது. அத்தகைய பொருளில் எதுவுமே கிடையாது.

நாம் நம் மனதை சூன்யத்தில் குவித்து, சிறிது காலம் முடக்கிப் போடலாம். அப்படி முடங்கிக் கிடப்பது கூட மனதின் அம்சந்தானேயொழிய அது மனதுக்கு அப்பாற்பட்ட ஒன்றல்ல.

மனதின் அனுபவங்கள் அனைத்தும் மனோலயம் என்ற பெயரில் அழைக்கப் பெறுகின்றன.

அனுபவம் எதுவும் இல்லாமல் மனதை இவ்வாறு முடக்கிப் போடுவது கூட மனோலயத்தோடு சேர்ந்ததே. இதுவும் ஒரு வகை மனோலயமே.

தூக்கம், சமாதி நிலை அனைத்தும் கூட மனோலயமே.

ஆனாலுங்கூட ஆன்மிகத்தில் மனங்கடந்த நிலைப்பற்றிப் பெரிதும் பேசப்படுகிறது. ஆகவே மனங்கடந்த நிலை என்ற பெயரில் விநோதமாக எதையெல்லாமோ கற்பிதம் செய்து கொள்ள ஆரம்பித்து விடுகிறோம்.

அப்படியானால் மனங்கடந்த நிலை என்று எதுவுமே கிடையாதா?

இருக்கிறது; நிச்சயமாக இருக்கிறது.

அதைத்தான், ஆன்மா, பிரம்மம் என்ற பெயர்களில் அழைக்கிறோம்.

உண்மையில் அதுதான் மனங்கடந்த ஒன்று. ஆகவே. அதனை மனதாலும் அறிய முடியாது.

ஆனால் அதுதான் அனைத்துக்கும் ஆதாரமாக இருந்து கொண்டிருக்கிறது.

மனது கடைசி வரையிலும் மனதாகத் தான் இருக்க முடியுமே தவிர ஆன்மாவாக ஆக முடியாது.

பிறகு ஏன் மனங்கடந்த நிலை பற்றிப் பெரிதாகப் பேசப்படுகிறது?

ஆன்மிக சாஸ்திரங்களைப் பொறுத்த அளவில் மனோ லயத்தை விடவும் முக்கியத்துவம் கொடுத்துப் பேசப்படுவது **மனோநாசம்.**

**மனோநாசம்** என்பது அடைய வேண்டிய ஒரு நிலையல்ல.

மனதின் லயத்துக்கு முக்கியத்துவம் கொடுக்காமல்

லயம் அனைத்தும் கலைந்து செல்வதே மனோநாசநிலை ஆகும்.

நாம் மாடிப்படிக்கட்டில் ஏறுவதாக வைத்துக் கொள்வோம்.

மேலே இருக்கும் இரண்டாவது படியில் காலை வைத்திடாமல் முதலாவது படியிலுள்ள காலை எடுத்திட முடியாது.

மனங்கடந்த ஆன்மாவுக்கு முக்கியத்துவம் கொடுப்பதன் மூலம், மன இயக்கத்துக்கு நாம் கொடுக்கும் முக்கியத்துவத்தை நிறுத்தி விடுகிறோம்.

இங்கு எது முக்கியம் என்றால் கீழ் இருக்கும் படியிலிருந்து காலை எடுப்பது மட்டுந்தான்.

– மனோ லயத்திலிருந்து விடுபடுவது மட்டுந்தான்.

**அனைத்து அனுபவங்களிலிருந்தும் விடுபடுவதுதான் மனோலயத்திலிருந்து விடுபடுவதாகும்.**

**மனங்கடந்த நிலைக்குப் போவது என்பது கூட அனுபவத்தைத் தேடும் போக்குதான். அது மனோலயத்துக்குக் கொடுக்கும் முக்கியத்துவமேயாகும்.**

**அனுபவங்களிலிருந்து விடுபட வேண்டும் என்பதையும், அனுபவங்களில் தங்கி விடக் கூடாது என்பதையுமே முக்கியமானதாகக் கருதி சாஸ்திரங்கள் பேசுவதற்குக் காரணம் என்னவென்றால்,**

**அதுதான் முக்தியின் செயல்பாடாகும்.**

உலக வாழ்வுக்கு மனோலயம் தேவைப்படுகிறது. ஆன்மிகவாழ்வுக்கு – முக்திக்கு மனோலயம் இல்லாமல் இருப்பதுதான் சரியானதாகும்.

ஆனால் மனதினுடைய இயற்கையான நிலையே அனுபவங்களிலிருந்து – மனோலயங்களிலிருந்து விடுபட்டிருப்பது மட்டுமே. மனோ லயங்கள் அனைத்தும் தற்காலிகமாக வந்து செல்லும் தற்காலிகமான நிலைகளே.

மனங்கடந்த நிலை என்ற பெயரில் மீண்டும் மனோலயத்துக்கு முக்கியத்துவம் கொடுக்காமலிருப்பது கூட மனோலய நாசத்துக்கு உதவியாக இருக்கிறது.

மனோலய நாசந்தான் நடைமுறை உண்மையான மனங்கடந்த நிலை ஆகும்.







# கேள்வி? பதில்...

## நமக்குத் தோன்றும் எண்ணம், உணர்வுகளின் ஆயுள் வெறும் அரை வினாடிதானா?

**V.A.P. சரவணன்** (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:**

நான் ஞானத் தெளிவு பெறுவதற்காக இதுவரை ஆன்மிகத்தில் பல பயிற்சி முயற்சிகளை செய்து வந்தேன். ஆனால் எந்தப் பலனும் கிடைக்கவில்லை. ஐயாவின் நூல்கள் சிலவற்றைப் படித்த பிறகு ஓரளவிற்குத் தெளிவு பெற்றிருக்கிறேன். இருந்த போதிலும் சில நேரங்களில் எனக்கு வேண்டாத எண்ணங்கள், உணர்வுகள் ஆகியவற்றின் தாக்கம் அதிகமாகவே இருக்கிறது. அவற்றின் ஆயுள் அரை வினாடி நேரம் தான் என்று ஐயா கூறுகிறார். ஆனால் நடைமுறையில் எனக்கு அவ்வாறு இல்லாமல் நான் மிகவும் கஷ்டப்படுகிறேன். மனதின் இயக்க உண்மையை நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையா? 'நான்' என்பதைப் பற்றிய தெளிவு இன்மையால் இந்தப் பாதிப்பா? எப்படிப் புரிந்து கொள்வது?

**பதில்:**

மனம் எப்படிச் செயல்படுகிறது என்ற இயக்க உண்மையைப் புரிந்து கொண்டால் எண்ணங்கள், உணர்வுகளின் ஆயுள் அரை வினாடி நேரம் என்பது புரிந்து விடும். நான் என்ற உணர்வும் மனதில் தோன்றி மறையும் எண்ணம் என்பதைத் தெரிந்து கொண்டால் **நான்** என்பதைப் பற்றியும் தெளிவாகப் புரிந்து விடும்.

நாம் வாழ்க்கையை நிறைவாகவும், மகிழ்ச்சியாகவும் வாழ்வதற்கு இயற்கை நமக்குக் கொடுத்த இரண்டு கருவிகள் தான் 5 புலன்களும் மனமும் ஆகும். இதில் புலன் என்பதைப் பற்றிப் பார்ப்போம்.

நமக்கு கண், காது, மூக்கு, வாய், உடல் என ஐந்து புலன்கள் இருக்கின்றன. நாம் விழித்திருக்கும் போதெல்லாம் கண்களால் பார்ப்பது, காதுகளால் கேட்பது, மூக்கால் சுவாசிப்பது, வாயால் சுவைப்பது, உடலால் தொடு உணர்வாக உணர்வது என இவை அனைத்தும் தொடர் இயக்கமாக நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன.

இந்தப் புலன் இயக்கம் தொடர்ந்து நடைபெறுவதற்கு நாமாக எதுவும் செய்வதில்லை. நமது புலன் இயக்கம் தன்னிச்சையாக, சுதந்திரமாகச் செயல்படுகிறது. புலன் பகுதியில் நமக்கு எந்த வேலையும் கிடையாது. ஏன் எனில் புலன் இயக்கத்தை நம்மால் ஒருபோதும் கட்டுக்குள் கொண்டு வர முடியாது. நம் கண்கள் திறந்திருக்கும் போது எதிர்ப்படும் காட்சிகளைத் தடுக்கவோ மாற்றவோ முடியாது. நம்மீது படும் காற்றையோ, நாம் கேட்கும் சப்தத்தையோ, நாம் எதிர் கொள்ளும் வாசனையையோ எதையுமே தவிர்க்கவோ மாற்றவோ முடியாது. இவை அனைத்தும் புலன் பகுதியில் சுதந்திரமாக நடைபெறுகிறது. இங்கு நமக்கு வேலையே கிடையாது.

அடுத்து மன இயக்கத்தைப் பார்ப்போம். நமது ஐந்து புலன்கள் வழியாக நாம் எதை உணர்கிறோம் என்பதை நமது மனம் கருத்து வடிவமாகத் தெரிவிக்கிறது. கண்கள் வழியாக நாம் எதைப் பார்க்கிறோம் என்பதை நமது மனம் கருத்து வடிவமாகத் தெரிவிக்கிறது. உதாரணமாக இவர் நமது நண்பர், அம்மா, குழந்தை, மனைவி, செடி, மரம் என எவற்றையெல்லாம் கண்களால் பார்க்கிறோமோ அவற்றையெல்லாம் நமது மனம் அவர் யார், என்ன உறவு, என்ன பொருள் என்பதை கருத்து வடிவமாக தெரிவிக்கிறது. இதுபோல் காது வழியாக அப்பாவின் குரல், பறவையின் சத்தம், குழந்தையின் சிரிப்பு, நடிகரின் குரல் என ஒவ்வொன்றையும் வேறுப் படுத்திக் காட்டுகிறது.

இனிப்பு வாய் வழியாக நாம் சுவைக்கும் போது இது இனிப்பு, கசப்பு, புளிப்பு, காரம், துவர்ப்பு என ஒவ்வொன்றையும் வேறுப்படுத்திக் காட்டுகிறது. மூக்கின் வழியாக சந்தன வாசனை, சாக்கடை நாற்றம், மல்லிகை மணம் எனப் புலன் உணரும் வாசனையை தரம் பிரித்துக் காட்டுகிறது. உடல் வழியாக வெப்பத்தை, குளிர்ச்சியை, மென்மையை, வருடலை, முரட்டு தனத்தை என உடல் உணரும் தொடு உணர்வை தரம் பிரித்து காட்டுகிறது.

இப்படி ஐந்து புலன்கள் வழியாக நாம் என்ன என்ன உணர்கிறோம் என்பதை மனம் தரம் பிரித்துக் காட்டுகிறது. புலன் வழியாக உணர்வதை மனம் கருத்து வடிவமாக நமக்குத் தெரிவிக்கிறது. புலன் வழியாக உணர்வது முதல் பகுதி, புலன் வழியாக எதை உணர்கிறோம் என்பதை மனம் கருத்து வடிவமாக தெரிவிப்பது இரண்டாம் பகுதி. முதல் பகுதியான புலன்களிலும் நமக்கு எந்த வேலையும் இல்லை. இரண்டாம் பகுதியான மனதிலும் நமக்கு எந்த வேலையும் கிடையாது.

ஐந்து புலன்கள் வழியாக நாம் உணர்வதை மனம் கருத்து வடிவமாக தெரிவிப்பது இயற்கையாக நடைபெறுகிறது. நமது ஐந்து புலன்களில் ஏற்பட்டு

மறையும் உணர்வு தான் மனதின் மூலம் அனுபவமாக உணரப்படுகிறது. இப்படி உணரும் அனுபவம் எல்லாம் ஒரு தொகுப்பாக மனதில் பதிகிறது. அப்படிப்பட்ட ஓர் அனுபவத் தொகுப்பைத் தான் நாம் 'நான்' என்று நினைத்துக் கொள்கிறோம். ஒவ்வொரு அனுபவமும் தோன்றி மறையும் போது அதன் நிழல் தோற்றமாகிய அனுபவிப்பான் என்னும் நானும் தோன்றுகின்றான்.

ஐந்து புலன்கள் வழியாக எப்படி எல்லா உணர்வுகளும் தோன்றி மறைகிறதோ அதே போல் மனதில் ஐந்து புலன்களில் என்ன உணர்ந்தோம் என்ற கருத்து வடிவமும் எண்ணமாகத் தோன்றி மறைகிறது. புலன், மனம் வழியாக நாம் உணர்வதைத் தான் அனுபவம் என்று கூறுகிறோம். அனுபவமும் தோன்றி மறையும் ஒன்று தான். அனுபவத்தில் இருந்து வெளிப்படும் அனுபவிப்பானும் தோன்றி மறையும் ஓர் எண்ணமே. ஐந்து புலன்கள் எப்படிச் செயல்படுகின்றனவோ அதே போல் அதனைத் தொடர்ந்து ஆறாவது புலனாக மனமும் செயல்படுகிறது.

மனம் என்ற புலனின் சிறப்பு என்னவென்றால் ஐந்து புலன்களில் உணரும் உணர்வுகளை ஓர் அனுபவத் தொகுப்பாக மனதில் பதிய வைத்துக்கொள்கிறது. நாம் என்ன உணர்ந்தோம், எப்படிச் செயல்பட்டோம், என்ன விளைவு ஏற்பட்டது என்ற ஓர் அனுபவ தொகுப்பைத் தன்னிடம் வைத்திருப்பது தான் மனதின் சிறப்பாகும். இந்தச் சிறப்பான அனுபவ தொகுப்பை பயன்படுத்தி தான் நம்முடைய புற காரியங்களைச் சிறப்பாகச் செய்து வாழ்க்கையில் எல்லா வளர்ச்சிகளையும் அடைகிறோம். அதே போல் மனதின் இந்தச் சிறப்பை மனதை சரி செய்வதற்கோ, மனதிற்கு எதிராக செயல்படுத்துவதற்கோ பயன்படுத்தும் போதுதான் எல்லாப் பிரச்சினைகளும் தோன்றுகின்றன. மனதின் சிறப்பை மனதின் உள்நிலை மாற்றத்திற்கு திருப்பாமல் புறக்காரியங்களைச் சிறப்பாக செய்வதற்குப் பயன்படுத்த வேண்டும்.

இது புரியாமல் அனுபவத்தின் நிழலான அனுபவிப்பான் தன்னை கர்த்தாவாக நினைத்துக் கொண்டு புலன், மன இயக்கம் தன்னுடைய கட்டளைப் படி தான் நடக்க வேண்டும் என்று இயற்கையாக தாமாக நடக்கிற இயக்கத்தை முட்டாள்தனமாக எதிர்த்துப் போராடிக் கொண்டு இருக்கின்றான். அனுபவிப்பானின் எந்தக் கட்டளையையும் கட்டுப்பாட்டையும் புலன், மன இயக்கம் கண்டு கொள்வதில்லை. அனுபவிப்பான் தன்னை நிரந்திரமானவன் என்று எண்ணிக் கொண்டு எல்லா இயக்கங்களிலும் முரண்படுகின்றான். அனுபவிப்பானின் தேவையற்ற முரண்பாடே அரை விநாடி நேரத்தில் மறைய வேண்டிய எண்ணங்களையும் உணர்வுகளையும் உயிர்ப்பித்து நீடிக்க வைக்கிறது. அனுபவிப்பான் தான் தன்னுடைய உண்மை நிலையை உணர்ந்து கொண்டு சுயமுரண்பாட்டிலிருந்து விடுபட்டுத் தேவையற்ற போராட்டத்தை கைவிட வேண்டும்.

புலன், மன இயக்கம் சுதந்திரமாக நடைபெறுகிறது. அனுபவம் தோன்றும் போது அனுபவத்தின் நிழலான அனுபவிப்பானும் தோன்றுகின்றான். இதுவரை இதில் எந்தத் தவறும் கிடையாது. அனுபவிப்பான் தன்னுடைய தகுதியை புரிந்து கொள்ளாமல் போராடுவதால் தான் எல்லாப் பிரச்சினைகளும் தோன்றுகிறது. அனுபவிப்பான் தனக்கு தெரியாமல் புலன், மன இயக்கத்திலோ, ஏன் தனக்கு தானே முரண்பட்டாலும் கூட எந்தத் தவறும் கிடையாது. எந்த கணத்தில் தன்னுடைய இயலாமையை புரிந்து கொள்கிறானோ அப்பொழுதே எல்லா இயக்கலிருந்தும் ஒட்டு மொத்தமாக விடுபட்டு விடுகிறான். அதன் பிறகு எல்லா இயக்கமும் சுதந்திரமாக நடைபெறுகின்றன.

அனுபவிப்பான், புலன், மன இயக்கத்தில் தனக்கு எந்த வேலையும் கிடையாது என்பது கவனத்திற்கு வந்த பிறகு அனுபவிப்பானுக்கு செய்வதற்கு என்று எந்த வேலையும் இல்லை. அனுபவிப்பானும் அந்தத் தொடர் ஓட்டத்தில் ஓடி மறைந்து விடுகிறான். புலன் இயக்கம், மன இயக்கம், அனுபவம், அனுபவிப்பான் என அனைத்தும் தொடர்ந்து ஓர் ஆற்றைப் போல் ஓடிக் கொண்டே இருக்கிறது. இதைத் தான் பிரவாகம் என்று குறிப்பிடுகிறோம். **நம் உள் நிலையில் நமக்கு எந்த வேலையுமே இல்லை என்பதைப் புரிந்து கொள்வதே ஞானம்.** மனதின் ஒரு பகுதி மனதின் இன்னொரு பகுதியை எதிர்த்து போராடிய போராட்டம் முடிவுக்கு வருகிறது. பிளவுபட்டுச் செயல்பட்ட மனம் ஒன்று இணைந்து எல்லாம் ஓர் இயக்கமாக மாறிவிடுகிறது.

புலனில் தோன்றி மறையும் உணர்வு அரை வினாடி நேரம் தானே. புலனில் உணர்ந்ததை மனம் கருத்து வடிவமாக காட்டுவதற்கு எடுத்துக் கொள்ளும் நேரம் அரை வினாடி நேரம் தானே. அனுபவிப்பான் தனக்கு மனதின் உள் நிலையில் எந்த வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்வதற்கு அரை வினாடி நேரம் போதும் தானே. அனுபவிப்பானும் எந்த வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்ள அரை வினாடி நேரம் போதும் என்கிற போது எல்லா இயக்கமும் ஓடி மறைகின்றன. எல்லா உணர்வுகளும், எண்ணங்களும் அரை வினாடி நேரத்தில் போய்க் கொண்டு தான் இருக்கின்றன. அவைகளில் எந்தத் தவறும் கிடையாது. அரை வினாடி நேரத்தில் தோன்றி மறைகிற விசயத்தை அனுபவிப்பான் தான் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு போராடிக் கொண்டு நீடிக்கிறான். அனுபவிப்பான் தன்னுடைய தகுதியைப் புரிந்து கொண்டு தனக்குத் தானே போராடுவதில் இருந்து விடுபடும் போது எல்லா எண்ணங்களும், உணர்வுகளும் அரை வினாடி நேரத்திலேயே ஓடி மறைந்து விடுகிறது. இதனை ஓர் எளிய உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்வோம்.

நமது வீட்டில் உள்ள ஓர் அறையில் ஜன்னல் வழியாக சூரிய ஒளி வந்து கொண்டு இருக்கிறது. அறைக்குள்ளே வெளிச்சம் நிரந்தரமாக தொடர்ந்து இருப்பதை போல் தோன்றுகிறது. அறையில் உள்ள வெளிச்சத்தை நிரந்தரமாகப் பிடித்து வைக்க முயன்றால் முடியுமா? உள்ளே இருக்கும் வெளிச்சத்தைப் பிடித்து வைக்க அறைக்கதவையும் ஜன்னல் கதவையும் மூடினால் என்ன ஆகும். வெளிச்சம் தங்குமா..? இருள் மட்டுமே மிஞ்சும். வெளிச்சம் என்பது தொடர்ந்து வந்து மறைந்து கொண்டிருக்கின்ற ஒளிக் கற்றைதான்.

**ஒளியைப் போல் தான் நமக்குத் தோன்றும் எண்ணமும் உணர்வும் தோன்றி மறையக் கூடியவை.**



K.S. ஜீவமணி
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

பகவத் பாதையின் மூலம் மாதம் ஒருமுறை உங்களைச் சந்திப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். இப்பாதையில் பயணிக்கும் நாம் அனைவரும் ஒரு ஞானக் குடும்ப உறுப்பினர்களாவே மாறி விட்டோம்.

பல காலம் எளிதில் அடைய முடியாததாக இருந்த மெய்ஞ்ஞானம். இப்போது பகவத் ஐயா அவர்களால் எளிமையாக்கப்பட்டுப் பலரையும் ஞானியாக்கியுள்ளது.

எட்டாக் கனியாக இருந்த ஞானம் உள்ளங்கை நெல்லிக் கனியாகி விட்டது. இவ்வரிய உண்மை எளிமையாக இருந்தாலும் இன்னும் அனைவருக்கும் எட்டாமல் தான் இருக்கிறது. துன்பங்களையும் துயரங்களையும் போக்கும் இந்த ஞானத் தெளிவை நாம் இந்த இதழின் மூலம் பல இல்லங்களுக்கும் கொண்டு சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இனி இன்னும் எல்லா இல்லங்களையும் அடைந்து அனைவரின் உள்ளங்களையும் புனிதமாக்க வேண்டும் என்பதே நமது நோக்கம். எனவே எந்தப் பேதமும் அற்று உலக மக்கள் அனைவருக்கும் இந்த உண்மை சென்றடைய வேண்டும் என்பதே நமது நோக்கம். இது நம் அனைவரின் முயற்சியால் வெகு விரைவாகவும், எளிதாகவும் எல்லோரையும் சென்றடைய வேண்டும் என்பதே நமது விருப்பம்.

இது அனைவரையும் சென்றடைய வேண்டும் என்பதற்காக ஆங்கில வடிவமாக **Bagavath Path** என்ற பெயரில் **PDF file** ஆகவும், **ஒலிப் பாதை** என ஆடியோ வடிவமாகவும் வெளியிட்டு வருகிறோம்.

பகவத் பாதையில் பயணிப்பவர்கள் ஒவ்வொருவரும் தன் சக நண்பர்களுக்கும் உற்றார் உறவினர்களுக்கும் இதனை பகிர்ந்து கொண்டாலே மிக விரைவில் அனைவரையும் சென்றடைந்து விடும்.

எனவே நாம் அனைவரும் இதனை ஒரு கடமையாக ஏற்று தேவைப்படுவோருடன் பகிர்ந்து கொள்வது உலக மக்களுக்கே செய்யும் உதவியாகும்.

மேலும் நமது ஐயாவின் ஞானமுகாம்களில் கலந்து கொள்வது என்பது ஞானத்தெளிவு பெறுவதற்கும், அதில் சந்தேகம் தெளிந்து உறுதி பெறுவதற்கும் மிகவும் பேருதவியாக இருந்து வருகிறது.

அந்த வகையில் சென்னையில் மார்ச் மாதம் 4 மற்றும் 5 தேதிகளில் தமிழிலும் பெங்களூரில் 11 மற்றும் 12 தேதிகளில் ஆங்கிலத்திலும் ஞானமுகாம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. இதில் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

சென்னை ஞானமுகாமை மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்த சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் தலைவர் திரு.**இரவிச்சந்திரன்** மற்றும் நமது பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் திரு. **தியாகராஜன்,** திருமதி.**முத்துலட்சுமி சரவணன்,** திரு. **ஆனந்த்** திரு.**பாலசுந்தரம்,** திரு.**பிரபாகரன்,** திரு.**ஸ்ரீதர்,** திரு.**ஜெகதீசன்,** திரு.**சீத்தாராமன்** திரு. **மாரிமுத்து** திரு. **சுந்தரராஜன்,** திரு. **பாண்டுரங்கன்,** திரு. **சங்கர்,** திரு.**வெங்கட்,** இவர்களோடு நமது மூத்த உறுப்பினர்கள் திரு.**சம்பந்தம் ஐயா** மற்றும் திரு.**சுகுமார்** திருமதி.**லில்லி சுகுமார்** தம்பதியினர், ஆகியோருக்கும் ஞான முகாமை வீடியோ பதிவு செய்த **அருள்ஜோதி T.V.** நிறுவனத்திற்கும் ஞான முகாமை **Youtube** ல் நேரடியாக ஒளிபரப்பு செய்த நமது நண்பர் கனடா திரு. **ஜெயராமன்** அவர்களுக்கும் நம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் பெங்களூரில் ஆங்கிலத்தில் நடைபெற்ற இரண்டு நாள் ஞானமுகாமை மிகவும் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்த நமது பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர் திரு.**பாபுலால்,** அவர்களுக்கும் அவருக்கு துணை நின்ற திரு. **இராஜசேகர்,** திரு. **சரவணன்** மற்றும் திரு. **சாரதி,** ஆகிய அனைவருக்கும் நாம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் ஏப்ரல் மாதம் 28-ஆம் தேதியிலிருந்து மே 1-ஆம் தேதி வரை நான்கு நாள் சிறப்பு ஞான முகாம் சேலம் ஏற்காடு மலைப்பிரதேசத்தில் நடைபெறவுள்ளது. இது நான்கு நாள் ஞானமுகாமாக நடைபெறுவதால் புதிய அன்பர்களுக்குக் கூட முழுமையான ஞானத்தெளிவை பெறுவதற்கு இந்த ஞானமுகாம் ஒரு நல்ல வாய்ப்பு. ஞான முகாம் நடைபெறும் இடம் இயற்கை சூழலோடு அமைந்திருப்பதால் ஐயாவின் ஞான உரையை எந்த இடையூறும் இல்லாமல் உள்வாங்குவதற்கும் அதைச் சிந்திப்பதற்கும் அதில் ஏற்படும் ஐயங்களை ஐயாவுடன் உரையாடித் தெளிவு பெறுவதற்கும் தெளிவில் உறுதி பெறுவதற்கும் இந்த ஞானமுகாம் மிகவும் பேருதவியாக இருக்கும். மேலும் தெளிந்தவர்களும் ஒன்றுகூடி கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதற்கும் தகுந்தாற்போல் நேரமும் இடமும் அமைந்திருப்பதால் இதில் கலந்துகொள்ளும் அனைவருக்கும் மிகவும் பயனுள்ளதாக அமையும்.

எனவே இந்த ஞானமுகாமில் தாங்கள் கலந்து கொள்வதோடு தங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்தி அவர்களும் இதில் கலந்து கொண்டு பயன்பெற செய்யுமாறு அன்புடன் வேண்டி கேட்டுக்கொள்கிறோம்.

யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்.

**எளிது எளிது**

# ஞான விடுதலை

**மிகவும் எளிது**

அன்புள்ளம் கொண்ட அனைவருக்கும் வணக்கம்,

கவலைகள் அனைத்திற்கும் தீர்வு என்ற நமது நூல் உங்கள் அனைவரது ஆதரவுடன் பரிசளிப்பு விலையாக ரூ. 50/-க்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டு வருகிறோம். இதற்கு 24 அன்பு உள்ளத்தினர் தலா ரூ.10,000/- வழங்கியிருந்தனர். தற்போது நமது பிரதான நூலான ஞானவிடுதலையையும் இவ்வாறு பரிசளிப்பு விலையில் ரூ.50/-க்கு வெளியிட்டுள்ளோம்.

ஆன்மிக உலகில் புது மலர்ச்சியை ஏற்படுத்திய இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற பரந்த நோக்கில், இந்நூற் செலவுகள் அனைத்தையும் ஏற்று, பரிசளிப்பு விலையில் இந்நூலை உங்களுக்கு வழங்கும் அருளாளர்கள்...

1. திரு. **கார்த்திகேயன்,** சிங்கப்பூர்.
2. திரு. **முருகேசவேலு,** மலேசியா.
3. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை.
4. திருமதி. **மாலா மங்களேஷ்வரன்,**
5. திரு. **ராம்லால்,** சென்னை.
6. திரு. **சபாபதி,** சென்னை.
7. திரு. **மாரிமுத்து,** சென்னை.
8. திரு. **குணாளன்,** கோவை.
9. திரு. **முரளி கண்ணன்,** கோவை.
10. திரு. **சங்கர்,** மேட்டூர்.
11. திரு. **பாலமுருகன்,** கோவை.
12. திரு. **U.சீத்தல்குமார்,** சீர்காழி.
13. திரு. **S.சம்பத்,** சென்னை.

இவர்களுக்கு உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் இந்தப் பரிசளிப்பில் பங்கேற்க விரும்பும் அன்பு உள்ளங்களை, எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இவண்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்.

# ஸ்ரீ பகவத் பவன்

அன்புள்ளம் கொண்ட அனைவருக்கும் வணக்கம்,

நமது ஸ்ரீ பகவத் ஐயாவின் இல்லமான பகவத் பவனில் ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவு பெற பலரும் வந்த வண்ணம் உள்ளனர். வருபவர்கள் தங்கிச் செல்வதற்கான வசதியும் அவர்களுக்கான உணவும் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இது எப்போதும் சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதே நமது ஐயாவின் விருப்பம். அந்த வகையில் ஐயாவை சந்திக்க வருபவர்களும் தெளிவு பெற்று மகிழ்ச்சியுடன் திரும்புகின்றனர். நமது பகவத் பவன் இல்லமானது இதன் நிறுவனர்களாக இணைந்த பலரின் பங்களிப்பின் பேருதவியால் உருவாக்கப்பட்டுள்ளது. அதே போல் நமது ஸ்ரீ பகவத் பவனின் மாதாந்திர செலவுகளை எதிர்கொள்ள நமது அன்பர்கள் சிலர் அவ்வபோது வழங்கும் நன்கொடை மிகவும் உதவியாக உள்ளது. அந்த வகையில் நன்கொடைகள் வழங்கி வரும்,

திரு. **இராஜகோபால்,** பரமத்தி.
திரு. **பாலசுப்ரமணியம்,** பரமத்தி.
திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்.
திருமதி. **முத்துலட்சுமி** சரவணன்
திரு. **ஜெயராமன்,** கனடா.
திரு. **வெங்கட்ராமன்,** சென்னை.

ஆகிய அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் நமது பகவத் பவனின் மாதாந்திர செலவாக ரூபாய். 50,000/-திற்கு மேல் செலவாகிக் கொண்டிருக்கிறது. எனவே வாய்ப்புள்ள அன்பர்கள் சிறு தொகையாக இருந்தாலும் ஒவ்வொரு மாதமும் வழங்கும் போது சிறு துளி பெரு வெள்ளமாக அது பேருதவியாக இருக்கும். வழங்கும் நன்கொடைகளை கீழ்கண்ட வங்கி கணக்கில் நேரடியாகவோ (அ) செக் ஆகவோ வழங்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**Sri Bagavath Mission HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem.**

பகவத் ஐயாவின் கருத்துக்களை புரிந்து கொண்டவர்கள் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி பகவத் பவனின் நிறுவனராக இணைந்து ஞானத் தெளிவை அனைவருக்கும் எடுத்துச் சொல்லும் ஸ்ரீ பகவத் மிஷன் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

அன்புடன்

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.




பெங்களூரு ஞான முகாமின் போது...



ஞான விடுதலை நூலின் புதிய பதிப்பு வெளியீட்டின் போது...



ஸ்ரீ பகவத் மிஷனில் Google Hanouts-ல் நேரடி ஒளிபரப்பின் போது...




ஞான விடுதலை நூலின் புதிய பதிப்பு வெளியீட்டின் போது...



ஞான விடுதலை நூலின் புதிய பதிப்பு வெளியீட்டின் போது...



ஞான விடுதலை நூலின் புதிய பதிப்பு வெளியீட்டின் போது...

# பாதையில் மலர்ந்த மலர்கள்

## பல ஞானிகளை உருவாக்கிய ஞானகுரு "பகவத் ஐயா"

அனைவருக்கும் வணக்கம்,

நான் அறிந்த வரையில் ஸ்ரீபகவத் ஐயாவின் சிறப்பு பற்றிப் சில தகவல்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

**முதல்சிறப்பாக:** என்னுடைய 25 வருட ஆன்மிக தேடுதலில் ஐந்து குருமார்களை அடைந்தேன். ஆனால் எதை அடைய வேண்டும் என்பது மட்டும் தெரியவில்லை. அவர்களும் புரிய வைக்கவில்லை. முதல் குருவை அடையும் போது நான் அடைய வேண்டியது சித்துகள் என்று நினைத்தேன். இரண்டாவது குருவை அடையும் போது ஜீவசமாதி அடைய வேண்டும் என்றும், மூன்றாவது குருவை அடையும்போது சிறு தேவதைகள். வசிய வழிபாடு என்றும், நான்காம் குருவை அடையும் போது மரணம் இல்லா பெருவாழ்வு அடைய வேண்டும், உடல் அணுக்களாக பிரித்து மறைய வேண்டும் என்றும், இன்னும் பலவாறாக நினைத்தேன்.

ஆனால் ஸ்ரீபகவத் ஐயாவை சந்தித்தப் பிறகு தான் நாம் ஒவ்வொருவரும் அடைய வேண்டியது Libration என்ற விடுதலை என்பதைப் புரிந்து கொண்டேன். இதை தெரிந்து கொள்ளவே எனக்கு 25 வருடமும் ஐந்து குருமார்களும் தேவைப்பட்டார்கள்.

**இரண்டாவது சிறப்பாக:**

'சும்மா இரு' என்ற சொல் எல்லா ஆன்மீக அமைப்புகளிலுமே கூறப்படுகிறது. இதை நான் தவறாகப் புரிந்து கொண்டேன். குடும்பம், தொழில், மற்றும் இந்த சமூகத்தை துறந்து, பற்றற்று தனித்து இருக்க வேண்டும் என்றே நினைத்தேன். ஞானம் பெற எதிலும் பற்று இருக்கக் கூடாது என்றும் அதற்கு நமது பொருளாதாரம், குடும்பம் மற்றும் தொழில் தடையாக உள்ளது என்று நினைத்தேன். இதையே தான் எல்லா அமைப்புகளுமே எடுத்துரைத்தன.

ஆனால் ஸ்ரீபகவத் ஐயா மட்டுமே புரியும் படியாக, சும்மா இருக்க வேண்டியது அகத்தில் மட்டுமே. புறத்தில் முழுமையான அறிவோடு சிறப்போடு செயல் செய்ய வேண்டும் என்றும், இதன் வழியாக உனது குடும்பத்திற்கும் இந்தச் சமூகத்திற்கும் உதவ வேண்டும் என்று மிக அற்புதமாகப் புரியும்படி கூறியவர். சும்மா இரு என்பது அகத்திற்கு மட்டுமே என்று தெள்ளத் தெளிவாகப் புரிய வைத்தார்கள்.

**மூன்றாவது சிறப்பு:**

என்னையும் ஞானியாக்கினார்கள், ஐயாவை சந்திப்பதற்கு முன் ஞானம் என்பது எட்டாக் கனி என்றும், ஒருவருக்கு பிறகு ஒரு ஞானிதான் உலகத்தில் அவதரிப்பார்கள் என்றும், அந்த ஞானியும் தன்னுடைய கடைசி நேரத்தில் தனக்குப் பிடித்த ஒரு சீடனை மட்டுமே ஞானியாக்குவார்கள் என்றும் நினைத்திருந்தேன்.

இவைகள் அனைத்தையும் தவிடு பொடியாக்கி அனைவரையும் ஐயா ஞானியாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

இவை அனைத்தும் ஐயாவின் பெருமை, ஆனால் ஐயா இருப்பதோ மிக மிக எளிமை. தேடுதலை முடித்துக் கொண்டு விடுதலை அடைய விரும்புபவர்கள், அனைவரும் ஸ்ரீ பகவத் ஐயாவை சந்தித்து நிறைவடைய வேண்டும் என்பதே எனது விருப்பம்.

நன்றி வணக்கம்,
அன்புடன்
**T.M.K. தியாகராஜன்**
சென்னை-76.
செல்: 9381019473



ஜென் கதை

# " தோல்வியே வெற்றி "

ஒருவன் மற்றவர்களால் செய்ய முடியாத பல காரியங்களைத் தன் அதீத முயற்சியால் சிறப்பாகச் செய்து வெற்றிக் கொள்வதில் வல்லமை மிக்கவனாக இருந்தான். சமுதாயத்தில் உள்ள எல்லா வசதிகளையும், வளங்களையும் தன்னுடைய மகிழ்ச்சியான வாழ்க்கைக்காக தன் முயற்சியால் பெற்று, சிறப்பாக வாழ்ந்து வந்தான். இவ்வளவு சிறப்புகளை பெற்றிருந்தும் மனதில் மட்டும் நிறைவு இல்லாமல் தடுமாறிக் கொண்டிருந்தான். மனதைத் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர என்ன என்ன வழிமுறைகள் உண்டோ, அத்தனையும் முயன்று பார்த்தான். மனதை அடக்கி ஆள ஆன்மிகம் ஒன்று தான் ஒரே வழி என்பதை உணர்ந்தான். தன்னுடைய பல சாதனைகளை விட மனதை அடக்கி ஆள்வதே சாதனைகளில் மிகப்பெரிய சாதனை என்பதைத் தெரிந்து கொண்டு ஆன்மிகத்தில் தீவிரமாகச் செயல்படத் தொடங்கினான். அதற்கான விடை தேடி பல குருமார்களைச் சந்தித்தான்.

மந்திரங்கள் ஜெபித்தான் மாற்றம் ஏற்படவில்லை.

தியானத்தில் தீவிரமாக ஈடுபட்டான் திருப்பம் எதுவும் ஏற்படவில்லை.

நல்ல எண்ணங்களை மனதில் பதிய வைப்பதற்காக கடுமையாக முயன்றான். மனம் எதிர்மறை எண்ணங்களையே வெளிப்படுத்தியது மனதை வெற்றி கொள்ள முடியாமல் தடுமாறிப் போனான். ஆனாலும் தன் முயற்சியை கைவிடாமல் தொடர்ந்தான்.

தற்செயலாக ஓர் ஞானியைச் சந்தித்தான்.

"மனதை வெற்றி கொள்ள எவ்வளவு முயன்றும் முடியவில்லை. வெற்றி பெறுவதற்கு என்ன செய்ய வேண்டும்?" என்றான்.

"வெற்றி பெற முடியவில்லை என்றால்... **தோற்றுப் போ"** என்றார் ஞானி.

சற்றும் எதிர்பார்க்காத இந்தப் பதிலினால் அவன் அதிர்ச்சி அடைந்து "புரியவில்லையே" என்றான்.

"மனத்தோல்வியே வெற்றி" என்றார் ஞானி.

"எப்படி சாமி மனத்தோல்வி வெற்றியாகும். கொஞ்சம் புரியும்படி சொல்லுங்கள்" என்றான்.

"மனதை கொண்டு மனதைச் சரி செய்ய முடியாது. மனம் என்பது இயற்கையானது, சுதந்திரமானது, முற்றிலும் தன்னிச்சையாக இயங்கும் இயந்திரகதியானது. மனதை நம்முடைய வசதிக்காக நிர்வாகம் செய்யும் எந்த சக்தியும் நமது அறிவுக்குக் கிடையாது. மனதை அதன் போக்கில் செயல்பட விடுவது மட்டுமே மனதை வெற்றி கொள்வதற்கான வழியாகும்" என்றார் ஞானி.

"தோல்வி அடைந்தால் வெற்றி கிடைக்குமா?" என்று கேட்டான் அவன்.

"வெற்றி கிடைக்க வேண்டும் என்பதற்காக மனத்தோல்வி அடையக்கூடாது. அப்படிச் செயல்படுவது என்பது வெற்றியடைய வேண்டும் என்ற எதிர்பார்ப்பின் இன்னொரு வடிவமே ஆகும். நம்மால் ஒரு போதும் மனதை வெற்றி கொள்ளவே முடியாது என்று நாம் நம் மனதிடம் தோற்றுப் போவதையே மனத்தோல்வி" என்று கூறினார்.

"மனத்தோல்வி அடைய நான் எந்த வகையில் முயற்சி செய்ய வேண்டும்?" எனக் கேட்டான்.

"தோல்வி அடைய முயற்சி எதற்கு? நம் முயற்சிகள் தோற்ற இடத்தில் தான் தோல்வி ஏற்படுகிறது. மனத்தின் இயலாமையை புரிந்து கொண்டாலே போதும்" என்றார்.

மனத்தோல்வியும் சும்மா இரு என்பதும் ஒன்றா? வேறா? என்றான்.

இரண்டும் ஒரே பொருளையே கூறுகின்றன. மனதை ஒரு போதும் வெற்றி கொள்ள முடியாது என்பது மனத்தோல்வியை குறிக்கிறது. மனதில் நாம் செய்வதற்கு எதுவும் இல்லை, செய்யவும் முடியாது என்பதைப் புரிந்து கொண்டு மனதை அதன் போக்கில் செயல்பட விட்டுவிடுவதே "சும்மா இரு" என்பது ஆகும். மனதில் எத்தனை முறை முயற்சி செய்தாலும் மனத்தோல்விதான் ஏற்படும் என்பதைப் புரிந்து கொண்டு மனதை எதிர்த்துச் செயல்படுவது ஒரு முட்டாள் தனமான வேலை என்பதை விளங்கிக் கொண்டு நம் மனதின் செயல்பாட்டிற்கு எதிராக நாமாக எதுவும் செய்யாமல் இருப்பதே சும்மா இருப்பதாகும்" என்றார்.

மனத்தோல்வியும், "சும்மா இரு" என்பதும் ஒரே பொருள் தான் என்பதை புரிந்து கொண்டு தன்னுடைய பல நாள் கேள்விக்கு விடை கிடைத்த திருப்தியில் மன இருக்கம் தளர்ந்தான் சாதனையாளன்.

**"சும்மா இரு"** என்பது நமது முயற்சியால் ஏற்படுவது அல்ல, நமது இயலாமையை புரிந்து கொள்வதால் ஏற்படுவது."



Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555